உ
சிவமயம்.
ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

திருக் களர்,

# ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகர்

## புராணம், கவி 1434.

---

இது
திருக் களர் ஆண்டவர் மாணவர்
வேத மொழி பெயர்ப் பாசிரியர்

## ஸ்ரீ சிவாநந்த சுவாமிகளால்

இயற்றப் பெற்று,



திருக் களர், கோ. ஆ. வீர மடாலயத் தலைவர்,

## கிருஷ்ணாநந்த சுவாமிகளால்

---

மதுரை,
V. சுப்புராயலு நாயுடு பிரஸில்,
பதிக்கப்பட்டது.

லை ரூபாய்] [1—50

உ

சிவமயம்.

ஓம் தத் சத் பரப் பிரஹ்மணே நம:

திருக் களர்,

# ஸ்ரீ வீர சேகர ஞாந தேசிகர்

## புராணம், கவி 1434.

இது

திருக் களர் ஆண்டவர் மாணவர்

வேத மொழி பெயர்ப் பாசிரியர்

**ஸ்ரீ சிவாநந்த சுவாமிகளால்**

இயற்றப் பெற்று,

திருக் களர், கோ. ஆ. வீர மடாலயத் தலைவர்,

**கிருஷ்ணாநந்த சுவாமிகளால்**

மதுரை,

V. சுப்புராயலு நாயுடு பிரஸில்,

பதிக்கப்பட்டது.

1962.

விலை ரூபாய்] [1—50

## விளம்பரம்.

| | |
|---|---|
| 1. திருக் களர் ஆண்டவர் சரித சுருக்கம் | 0—25 |
| 2. திருக் களர் ஆண்டவர் 50வது வருஷப் பாராட்டுரை (34 பெயர்கள் எழுதியது) | 1—50 |
| 3. மேற்படி கலிகோ பைண்டு | 2—00 |
| 4. திருக் களர் ஆண்டவர் புராணம் கவி 1434 (ராப்பர்) | 1—50 |
| 5. மேற்படி கலிகோ பைண்டு | 2—00 |

24-4

ராம நாத புரம் ஜில்லா, திருப் பூ வணம்,

காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள், வெளியிட்டன.

| | | ரூ.ந.பை |
|---|---|---|
| 1 | வேதாந்த பதார்த்த மஞ்ஜூஷா வசநம் | 2—50 |
| 2 | விசார சாகரம் ஹிந்தி மொழி பெயர்ப்பு | 2—25 |
| 3 | கதா சரித் சாகரம் வசநம் கதை | 2—25 |
| 4 | வியாச தாத்பரிய நிர்ணயம் வசநம் | 0—50 |
| 5 | வேதாந்த சித்தாந்த முக்தாவலி வசநம் | 0—50 |
| 6 | நைஷ்க் கர்ம்ய சித்தி வசநம் | 0—50 |
| 7 | வேதாந்த பரிபாஷை வசநம் | 0—44 |
| 8 | ஸ்வராஜ்ய சித்தி வசநம் | 0—50 |
| 9 | மண்டல பிராஹ்மண உபநிஷத் | 0—25 |
| 10 | ஈசாவாஸ்ய உபநிஷத், சங்கர பாஷ்யம் | 0—25 |
| 11 | ஹரிமீடே - ஹரிதத்வ முக்தாவலி | 0—75 |
| 12 | மார்கழித் திங்கள் பாராயண மஞ்சரி | 0—50 |
| 13 | பகவத்கீதை 15வது அத்யாயம், மூர்க்க சதகம் | 0—50 |
| 14 | மந்திர உபதேசம் வசநம் | 0—25 |
| 15 | திருக் களர் வீர சேகர சரிதம் வசநம் | 1—00 |
| 16 | நாநா ஜீவ வாதக் கட்டளை உரை | 2—00 |
| 17 | கீதா சாரத் தாலாட்டு லகு சந்திரிகை உரை | 2—00 |
| 18 | மேற்படி நக்ஷத்திர விளக்க உரை | 0—25 |
| 19 | மகா ராஜத் துறவு, மநப் பிரசாதிநி உரை | 2—00 |
| 20 | பக்தி (வைராக்ய) சதக பத உரை பொழிப் புரை | 1—50 |
| 21 | வைராக்ய தீபம்-பத உரை பொழிப்புரை | 0—50 |
| 22 | சீடா சாரம், பால போதிநி உரை | 0—50 |
| 23 | வேதாந்த சாஸ்திரத் ரத்நாவலி 9 சேர்ந்தது | 3—00 |
| 24 | ஈசுவர கீதை பகவத் கீதை பிரஹ்ம கீதை 3 சேர்ந்த கீதாத் திரயம் கவி | 3—00 |
| 25 | (விவேக சூடாமணி அஞ்ஞ வதைப் பரணி பஞ்சதசி மூன்று சேர்ந்த) சாஸ்திர ரத்நத் திரயம் | 3—00 |
| 26 | வாசிட்டம் 2055 கவி | 2—25 |

| | | |
|---|---|---|
| 27 | ஒன்பது துறவிகள் பாடிய திரு எம் பாவை திருப் பள்ளி எழுச்சி அருட் பாமாலை | 1—00 |
| 28 | வீர சேகரத் திரு எம் பாவை திருப் பள்ளி எழுச்சி மணிமாலை சிறு சுடர் உரை | 0—75 |
| 29 | மேற்படி பத உரை | 0—25 |
| 30 | வைராக்கிய சதக தோத்திர உரை | 0—19 |
| 31 | ஈசுவர கீதை கவி | 0—25 |
| 32 | பகவத் கீதை கவி | 1—25 |
| 33 | பிரஹ்ம கீதை கவி | 0—38 |
| 34 | கைவல்ய நவநீதம் | 0—56 |
| 35 | பஞ்சதசி கவி | 0—62 |
| 36 | வேதாந்த சஞ்ஞா வசநம் | 0—13 |
| 37 | சார்த சதக ஸ்தோத்ர ரச மஞ்சரி | 1—50 |
| 38 | திரிம்சத் ஸ்தோத்ர ரச மஞ்சரி | 0—25 |
| 39 | காசிகாநந்த விஜயம் | 0—25 |
| 40 | கைவல்ய நவநீதம் துறவு சாமிகள் பத சார உரை | 3—50 |
| 41 | கைவல்ய நவநீதம் கிருதபாக உரையும், ஆராய்ச்சி களும். | 3—50 |
| 42 | சசிவந்ந போதம் பதார்த்த பாஸ்கரன் உரை | 2—00 |



244



சிவமயம்.

# முகவுரை.

அலைகடல் சூழ்ந்த நில உலகின்கண், "யுகந்தோறும், யுகந்தோறும், அவதரிப்பேன்" என்று பகவான் பகவற் கீதையில் கூறியது போன்று, பிரஹ்மா, விஷ்ணு, ருத்திரன் என்பவர்கள் அம்ச அவதாரம் செய்கின்றூர்கள், அப்படி அவதரித்ததில், திருக் களர் ஆண்டவர் என்னும் வீர சேகர ஞாந தேசிக சுவாமிகளும் ஆவார்கள். அவர்களைத் துர்வாச அவதாரம் என்றும், ருத்திர அவதாரம் என்றும் கூறுவார்கள்.

அவர்களுடைய சரிதத்தினை, மும் மூர்த்தி அவதாரம் போன்று, வீர சேகர ஞாந தேசிக சுவாமிகள் மாணுக்கர் மூவருள், விஷ்ணு அவதாரம் போன்ற, வேத மொழி பெயர்ப்பு, காசி வாசி, சிவாநந்த சுவாமிகள், இற்றைக்கு நாற்பது வருஷங்கட்கு முன், "தேசங் குலவவளர்ப் போன் சற் சிடன்" என்று சொல்லியபடி, நா டெல்லாம் சுற்றித் திரிந்து, பலரிடமும் விசாரித்து, கோவி லூர் மடத்தின் சம்பிரதாயமும, யதி தர்மங்களும், ஒன்று விடாமல், சட் டப் புத்தகம் போன்று, 1430 கவியில் கவினுற யாவரும் போற்று மாறு செய்தார்கள். அது விரிவாக இருந்தமையின், பலர் வசந சரிதம் விரும்பினுர்கள். அதனுல், வீர சேகர ஞாந தேசிக ஸ்வாமிகளின் சரிதத்தினை சுருக்கி வசநமாக ஒன்று எழுதினுர்கள். அந்த வசந சரிதம், இற்றைக்கு 30 வருஷங்கட்கு முன் திருப் பூ வணம், காசிகாநந்த ஞாநாச்சாரிய ஸ்வாமிகளால் அச்சிட்டு வெளியிடப்பட்டு உலகில் நிலவுகின்றது. வீர சேகர ஞாந தேசிக சுவாமி கள் மீது, பிள்ளைத் தமிழ் ஒன்று நூறு செய்யுளில் 10பரு

வம் உடைய தாகச் செய்தார்கள். இவ் விரண்டும், இது வரை அச்சு வாகநம் ஏருதிருந்து, இப்போது திருக் களர், கோ. ஆ. வீர. மடத் தலைவர், கிருஷ்ணுநந்த சுவாமிகளால் அச்சிடப்பட்டு வெளியிடப்படுகின்றது.

சிவாநந்த சுவாமிகள், கோவி லூர் நால்வர் நான் மணி மாலை, சென்னை. வியாசர்பாடி, கரபாத்திர சிவப்பிர காச சுவாமிகள் சரித வசநம், வேலூர், தோப்பாச் சாமிகள் சரித புராண வசநம், திரு வொற்றியூர் மான்மிய வசநம், யஜுர் வேத மொழிப் பெயர்ப்பு. முதலியனவும் செய்து அச்சிட்டிருக்கின்ருர்கள்.

இந்தப் புராணத்தினை வாங்கி ஒவ் வொருவரும் அவசி யம் படிக்கவேண்டும். துறவு, துறவிகள் நடக்கவேண்டிய முறை, மடத்து முறை, மடத்தின் நடை முறை, பாடம் கேட்கும் முறை. சிந்திக்கும் முறை. ஒழுக்கம், உணவு முத லியன 24மணி நேரத்துக்கும் வகுத்திருக்கும் முறைமுதலிய வற்றை,கோவி லூர் மடம் போய்ப் பார்க்காமலே தெரிந்து கொள்ளும்படி, பிளான் போன்று, கற்ருரும், மற்ருேரும் தெரிந்துகொள்ளு மாறு அழகாகச் சித்திரித்துப் பாடியிருக் கின்றது போற்றத் தக்க தாகும். குரு பக்தியினையும், குரு ஸ்தாந சம்பிரதாயத்தில் அபிமாநத்தினையும், யாவரும் கண்டு களிக்கும்படி கூறியிருப்பது பொன் போல் போற் றத் தக்க தாகும்.

இவற்றிலுள்ள பிழை வழு ஓசை தளை முதலியவற்றை யும், தவறுகளையும். செப்பம் செய்து, புருப் பார்த்து, திருக் களர் மடம் தலைவர், ம. கிருஷ்ணுநந்த சுவாமிகள் வேண்டு கோளின்படி அச்சிட்டு முற்றுவித்தனம்.

---

திருப்பூவணம், வேதாந்த மடம்,
சதசாஸ்திர கர்த்தா,
*காசிகாநந்த ஞாநாச்சார்ய ஸ்வாமிகள்.*

मुक्ति राम लिंग ज्ञान देशिक स्वामिकल्, कोविलूर् मठम् ।



முக்தி ராம லிங்க ஞாநதேசிக சுவாமிகள்
கோவிலூர் மடம்.

अरुणाचल ज्ञान देशिक स्वामिकल्, कोविलूर् मठम् ।



அருணசல ஞாந தேசிக சுவாமிகள்
கோவிலூர் மடம்.

वीर शेकर ज्ञान देशिक स्वामिकल्, कोविलूर्-तिरुक्कळर्।



வீரசேகர ஞாந தேசிக சுவாமிகள்

கோவிலூர் - திருக் களர்,

सिदम्बर ज्ञान देशिक स्वामिकल्, कोविलूर् मठम्।



சிதம்பர ஞாந தேசிக சுவாமிகள்

கோவிலூர் மடம்.

மகா தேவ ஞாந தேசிக சுவாமிகள்
கோவிலூர் மடம்.



சிவாநந்த ஞாந தேசிக சுவாமிகள்
ஏகாம்பரக் குப்பம்.



काशिकानन्द ज्ञानाचार्य स्वामिकळ्, तिरुप्पूवणम्।




காசிகாநந்த ஞாநாச்சார்ய சுவாமிகள்
திருப் பூவணம்.



அண்ணாமலை ஞானதேசிக சுவாமிகள்
கோவிலூர் மடம்.



நாராயண சுவாமிகள், திருக் களர்.



சுப்பய்ய ஞான தேசிக சுவாமிகள்
சூளை—சென்னை.

ம. கிருஷ்ணாநந்த சுவாமிகள், திருக் களர்.

# புராண சாரம்.



சீர்மலியும் பாண்டியதிற் செல்வ மோங்கிச்
சிறப்பேயும் வணிகர்மிகச் செழிக்கு நாட்டில்,
பேர்பரவு முமையருணு சலனுர் தம்பாற்
பேரன்பால் ஞானப்பால் பெற்ருன் போன்று,
பார்புகழுங் கிலகத்தா வணியாங் திங்கள்
பன்னுபுனர் பூசமதில் வெள்ளி வாரம்,
நேருறுநம் வீரசே கரனுர் தோன்றி
நிமலமதி யால்நேருங் தமிழு மோதி. (1)

அருளாதி நற்குணங்க ளடைவி லேய்ந்து
வரனடியார்க் கன்போடா லயமு மாற்றிப்,
பொருடேடு நாட்டமில்புண் ணியத்தைத் தேடிப்
புகழ்தருண மணநீத்துப் புநித ருகிக்,
குருநாடி வெளிப்போந்து கோவி லூர்போய்க்,
குருவாகுஞ் சிதம்பரனுர் பாதங் கொண்டு,
தருபோதத் தத்துவநூ றனையு மோர்ந்து
தகுமூல வுகந்தனது தாளைச் சேர்ந்தே. (2)

இச்சையறு மிலிங்கசந் நியாசம் பெற்றிங்
கிரந்துண்டு பந்துவுரை யேற்கா தேகி,
மிச்சமுள ஞானநூல் குருபா லோதி
மேன்மைசா லிராமேச்சு வரத்தை மேவி,
அச்சமற நடந்துசிதம் பரத்தை யண்ணி
யரும்பொன்னம் பலவனுறை மடத்தைச் சார்ந்து,
உச்சமுறு தவவிரத மொழுக்கத் தோடு
முளஞான்று வவனுரையாற் கோவிலூரின். (3)

அரிதாகு மத்துவித மடத்தை யேற்றங்
கரன்கோவிற் பணிமுடித்து மவனி போற்ற,
விரிவாகக் கும்பாபி டேகஞ் செய்து
விழைந்திடுபல் லடியார்கள் வாழ்வ தற்கும்,

பெரிதாக மடந்திருத்திப் பேரன் புள்ளார்
பேறடையப் பிரமபதம் பேணிக் காட்டித்,
திருவாத வூரடிபோற் பாண்டி நாட்டிற்
செயும்பணிகள் செய்துமுடித் தருளி ஞலே. (4)

புகழ்சோழ நாடடைந்து புகலி வேந்தன்
போற்றுதிருக் களரதனைப் பொருந்தி யாங்கே,
அகலால யப்பணியு மன்பா லாற்றி
யத்தலத்தைத் திருத்திமிக வவ்வூ ராண்டு,
சுகமாகக் கும்பாபி டேக மாற்றிச்
சொல்விரோ திகிருதுவை காசித் திங்கள்,
சகநாடு மைந்தேருந் தலத்தி லோடுஞ்
சமயத்தில் சிவனடியைச் சார்ந்தொன் ருஞன். (5)

*புராண சாரம் முற்றும்*

---

உ

வீரமா முநிவர் புராணஞ் செய்தவரும்,
வேத மொழி பெயர்ப் பாசிரியரும்,
பற் பல நூற்களை யியற்றினவரு மாகிய,

# காசிவாசி, சிவாநந்தயதீந்திர சுவாமிகளின்
# சரித்திரம்.

---

இது உயர் திரு வித்துவான் மறைசை, இராம சாமி
அவர்களால் இயற்றப் பெற்றது,



திங்கள் செஞ்சடை சேர்த்திடுதம்பிரா னருளினுற்செழித்தே,
யங்கண் மாவுல கத்தினி லண்டர்த முலகென வவிரு,

மெங்கள் சீர்மலி பாரத கண்டமா மினியநல் லுலகிற்,
பொங்கு சோழமண் டலவள மோதுதல் புலவர்க்கு
[மரிதால். (1)

வெண்மை யாகிய நிறமுடை மேதகு முகிற்குழாம்
[விழைந்து,
தண்மை யோடுபன் னலமுடைச் சாகர நீரினை யள்ளி,
யுண்மை சேருல கிற்குநல் லுதவியை நெஞ்சினி லுன்னி,
திண்மை யாகிய குடகுமா மலையெனுஞ் சிலையதைச்
[சேர்ந்து. (2)

தூய தாம்பர ஞானநற் பொருளெனத் தொல்லுல கோர்க,
ளாய நின்றிடு மண்ணலை மஞ்சந மாட்டுதல் கடுப்ப,
மேய வம்மலை தன்னிலே யமலைகண் மிகவுமே யோங்க,
வேய தண்புனல் சிந்திட வந்தநல் லினியதா மமுதம். (3)

அன்று வோர்முநி கரகத்தி னறலுடன் சேர்ந்துகா விரியாய்,
நின்ற மாவுல கிதுபெரு நீள்வள மடைந்திட நினைத்து,
வென்ற கோள்புலன் விரதிய ராதியோர் விரும்பியே மகிழ,
நன்ற தாய்வரும் பொன்னியின் வளந்தனை நாடில். (4)

பொருந்து மந்நதி யாகிய பூவையாங் காவிரி யாறு,
சுரும்பி னின்னிசைப் பொழில்வளர் சோழநன் னுட்டி,
லருந்து மின்னமு தாகிய வரியநன் னீரெனு மமுதை,
விருந்தெ னும்படி விளங்கிட வெங்கணுந் தேக்கியே
[விரைந்து. (5)

வேறு

ஏயதிருத் தேவார மியம்புமொரு நூற்றினுட,
னுயவொரு தொண்ணூறு மடைவாகப் பெற்றுநல,
மேயதிருத் தமிழ்வேந்தர் விளங்கிடுநன் மேதினியி,
னேயமுடன் சென்றினிய நீரைப்ப பப்பியரோ. (6)

புனனுடெ னப்புகழ்ந்து புலவர்களும் போற்றமிகு,
மனநாடெ னவிதந்து வறிஞர்களும் வாழ்த்திடநற்,
கனமாகி யபெருமை கருதியளித் ததற்பின்,
மனமேயு மன்னமுறும் மணித்தோள்க மன்னிடவே. (7)

நாடுஞ்செ ழிப்படைய நகரந்த ழைத்திடவும்,
வீடுமிக விரும்பும் விரதர்க ளிப்படைய,
வோடித்தன் னுயகனு முவரி தனைச்சேர்ந்து,
கூடிக்க ளிக்கின்ற குளிர்சோழ வளநாடு (8)

மண்ணிற்பி றந்தார்கண் மறித்தும்பி றவாம,
னண்ணப்பெ ருவீடு நனியளிக்கு மாரூரு,
மண்ணனட ராச னநுதிநமு நடஞ்செய்ய,
நண்ணு புகழ்த்தில்லை நகருமுள பெருநாடு. (9)

கோழிக்கொ டிக்குமரன் கூறுக வவதரித்த,
வாழிதிரு ஞாந வள்ளலெனுஞ் சம்பந்த.
ஞழிப்பெ ரும்புவியி லடைந்து வளர்ந்ததிருக்,
காழிப்ப தியதனுற் கவின்மலிந்த புகழ்நாடு. (10)

கறுத்து விளங்குதிருக் கண்டமுடைச் சிவனுருக்,
கறுத்துக் கறிசமைத்து வன்புறுதன் குழந்தைதனைப்,
பொறுத்துப் படைத்தளித்துப் புகழைமிகப் பெற்றதிருச்,
சிறுத்தொண்ட னெனும்பெரிய சிவபத்தன் வருநாடு. (11)

தாவிலர சாட்சிமிகத் தான்வழவு மென்றெண்ணி,
வாவிலொரு கன்றிற்கா வருமைபெறு கான்முளையை,
யாவியற வாழிவிட்ட வரியமநு நீதிகண்ட,
கோவினர சாட்சிதனைக் கொண்டநெறிநாடு. (12)

சுந்தரனென் றோதுமொரு தொண்டனி யம்பியநற்,
செந்தமிழன் றிறத்தினுற் செறிந்தரிசிப் போதிலே,

யிந்தணிந்த வீச னிசைந்த பரவைமனே,
வந்துவொரு தூதுசொன்ன வளமுடைய திருநாடு. (13)

வேறு

கந்தப் பொழில்கள் மிகமலிந்து கவினிற் றலைமை பெற்ற
[தெனு,
மிந்தத் திருநாட்டின் கண்ணே யிசையார் மறைகள்
[போற்றிமிக,
முந்திச் சிவஞ ரருள்பெற்று முதன்மை யடைந்த பெருமை
[யுடை,
அந்த மறசை நகர்ப்பெருமை யறைதற் கியாவர் வல்லாரே.

ஆதி சேது வென்றெங்கு மறையும் பெருமை மிகவுடைய,
நீதி யாகுந் தலமீதோய் நிகழ்த்தும் பின்னும் பலநூலு,
மோதும் பெருமை தனையுற்ற வுஞற்று மறைகள் போற்றிய
[பின்,
ஞேதிற் பயஞ மறைசையென வுரைப்பா ருலக ருவப்
[போடு. (15)

செப்பு புகழா ரப்பரவர் தரிசித் தேத்தத் திருக்காப்புத்,
தப்பில் கபடாந் திறக்கவெனத் தரணி புகழுந் தேவார,
மொப்பில் பெருமை யுடையதா யுரைக்கத் திறந்த
[பெருமையுட,
னப்பாற் காழிச் சம்பந்த னடைத்த வற்பு தமுமுண்டால்.16

மன்னும் புகழ்சேர் மதுரைநகர் மாறன் சமண ஞகிஞ,
னின்னே யீங்கு போந்தெமது வின்ன றன்னைக் களைக
[வென,
மன்னன் றேவி விடுத்ததொண்ட மாசில் புகழ்சால் சீகாழி,
மன்னன் றன்னைக் கண்டுகுறை வலிந்து கூறுந் தலமுமிதே.

கூடன் மேவுங் குழகனெனுங் கொற்றச் சோம சுந்தரன்ற,
னுட லெல்லா மிகவிரித்தே யழகு மிகவே யாப்பதனுற்,
பாடல் செய்த பரஞ்சோதி முநிவ னென்னும் பரந்தபுகழ்,
சூடல் செய்த புலவனுமே தோன்றுந் தலமு மீதாமால்.

குறைத லில்லாப் புகழிங்ஙன் கூறற் கரிதா யெந்நாளு,
நிறைத லுடனே நின்றிடுமின் நீண்ட மறைசைப் பெருமை
[தனை,
அறைத லியார்க்கு மரிதாகு மவனி மிசையே மிகச்
[சிறந்தோ,
ருறைத ருனு மீண்டென்றே யுண்மை யுரையு முளதாமால்.

வேறு

இப்பெரும் புகழ்க ளெல்லாமிலங்குமிம் மறைசை யென்னு,
மொப்பிலாத் தலத்தின் பாங்க ரொளிர்வதா யுயர்ச்சி யாகி,
அப்பெடு முகில்கள் பெய்த வறலினுல் விளைசெய் சூழ்ந்த.
செப்பிடு மாயக் காரன் புலமெனுஞ் சிற்றூ ருண்டால் (20)

மொழிந்தவிவ் வாயக் காரன் புலமெனு மூதூர் தன்னிற்,
பழந்தமிழ் நாட்டா ரென்று பாரெலாம் புகழா நின்ற,
செழித்திடு மூவேந் தர்தஞ் செல்வநற் குடியிற் றேன்றி.
யிழந்திடா தவர்த மக்கு மினியபே ரரசு தந்த. (21)

வீரரென் றுரைக்கு மிந்த விறன்மிகு குடியைப் பாரின்,
சீரிய வறிஞர் தாமுஞ் செப்பிடுஞ் சிறப்ப தாக,
ஆரியந் தமிழு மற்று மகமுடை யார்க ளென்று,
பூரிய மிவர்க ளின்றேற் புகழ்தமிழ் நாடு மின்ருல். (22)

இங்கிவர் குலமே யிந்து குலமென விசைப்பார் மேலோர்,
எங்கிவர் பெருமை தன்னை யானெடுத் தியம்ப லாகுந்,
சங்கநூ றம்மை நோக்குஞ் சதுருடை யறிஞர் தாமுந்,
துங்கநல் லறிவி னுலித் தொடர்பெலா மறிவார் மன்னே.

உரைத்தவிப் பெருமை மிக்க வொப்பருங் குடியிற் ருனு,
நரைத்தவெள் விடையி லூரு நலந்தருஞ் சிவநா மத்தை,
யுரைத்திடு மொருவன் வந்தா னுலகின ரவன்றன் பேரை,
யருத்தமார் சாமித் தேவ ரென்றுமே யறைகு வாரால்.(24)

சாமியென் றுரைக்கு மந்தச் சற்குண வான்ற னக்குக்,
காமிய வில்ல றத்துக் காரிகை யொருத்தி வந்தாள்,
பூமியிற் சிறந்து வாழும் பூவையர்க் கரசி போல்வா,
ணேமிகொ ளீசன் றேவி நீர்மைய ளழகு மிக்காள். (25)

இன்ன வடா னு நாளு மியம்பிடும் வார்த்தை யெல்லாங்.
கன்னலே யென்னு மாறு கழறிடுஞ் சிறப்பு வாய்ந்தோ,
ளன்னதாந் தன்மை யாலே யவள்பெறு நாமம் தானு,
மன்னிடு மதுரம் மாளென் காரண மாயிற் றன்றே. (26)

நம்மையா ளிறைவன் பாத நாண்மலர் தனையும் போற்றி,
யம்மனைக் கிழத்தி யோடு மாகுமில் வாழ்க்கை தன்னை,
யிம்மியுங் கோணு தென்று மியல்புட னியற்றிக் கொண்டு,
செம்மையா யுலகோர் போற்றச் சீருடன் வாழ்ந்து
[நின்ருன். (27)

மதுரம்மா ளென்னு மந்த மாதுடன் வாழு நாளில்,
விதுவணி யீச ஞர்தம் விளங்கிடு கருணை யாலே,
புதல்வரோ ரைவர் வந்த புத்திரச் செல்வ மாக,
மதுமொழி வாய்ந்தி ரண்டு மங்கையர் தாமும் வந்தார்.(28)

பின்னரச் சாமி யென்னும் பெரியவன் பேணி யேதான்,
முன்னர்ச்செய் தவத்தி ளுலு முத்தமிழ் நாட்டோர் செய்த,
மன்னிய தருமத் தா லு மைந்தன்ரு ெெருவன் வந்தான்,
அன்னவன் றன்னைக் கண்டே யனைவரு முவகை பூத்தார்.

இறுதியில் வந்த பால னிலங்கிடு மினிமை கண்டு,
செறிபெரு மன்பினேடு சீர்பெற வளர்த்துப் பின்னர்,

உறுதியாங் கல்வி தன்னை யுதவென வுபாத்தி தன்பாற்,
குறுகிடச் செய்திட் டார்கள் குமரனுஞ் சின்னு டன்னில்.

பள்ளியிற் பயிலும் வித்தை பாங்குடன் கற்று மேலோ,
ரெள்ளிய நடத்தை யின்றி யினிதுட னிருக்குங் காலை,
யொள்ளிய வறிவான் மிக்கா னுயர்தரு மிராமை யப்பேர்,
கொள்ளொரு துறவோ னந்தக் குமாரனைக் கொண்டு
[சென்ருன். (31)

தமர்மனை விட்டுச் சென்று தவநெறி தன்னைச் சார்ந்த.
குமரனப் பெரியோன் ருனுங் கூறிடு மறிஞர் பாலுந்,
தமிழ்மொழி நூல்க டம்மைச் சண்முக னருளா லியாருஞ்,
சமமிலை யென்னக் கற்றுத் தமிழ்க்கலை யறிஞ ஞனன். (32)

வேறு

கலைகடனின் மிகச்சிறந்த கவனமுள வின்னவன்ருன்
கருதிப் பின்னர்,
மலைமகளை யொருபாகம் வைத்தருளுஞ் சிவபெருமான்
வயங்கி யோங்க,
வலைமகடன் னருள்காட்டு மரும்பதியா மமைப்புமிக
அருமை வாய்ந்த,
குலைமிகுத்துத் தெங்காடக் குயில்பாடும் கோவிலூர்க்
குறுகினனே. (33)

ஆங்கணுள திருமடத்தி லற்புதசிற் கோலமுட
னவிர்ந்து நாளு,
மோங்கிடுநற் கருணைதனி லுலகமதி லொருவனென
வுயர்ந்து பாரில்,
வீங்கியநற் புகழோடு விளங்குதிரு வீரசே
கரனென் றேத்தும்,
பாங்குபெறு மொருஞான பண்டிதனும் பெரியோனைப்
பணிந்து கண்டு. (34)

பேர்படைத்த வன்னவன்றன் பெற்றிமிகு திருவடியைப்
பெரிது போற்றி,
சீர்படைத்த செகதலத்திற் பேரருள்சேர் மகிமைதனிற்
சிறந்து மோலாங்,
கார்படைத்த கருணையுளோய் கழனல்கி யருள்கவெனக்
கசிந்து வேண்டி,
யேர்படைத்த வவன்றுளை யினிதுபணிந் துருகியே
யெழுந் துநிற்க. (35)

நின்றவனைத் தன்னிருகண் ணிறைந்தபெருங் கருணைமிக
நிலவ நோக்கி,
நன்றஞ்சே லுன்பிறவி நலிந்திடயா நல்கிடுவே
மருந்த தற்கு,
மொன்றென்று கூறியவன் பவநோய்க்கு வுணர்வாகு
மருந்தை யீந்து,
வென்றமறை முடியென்னும் வேதாந்தம் விளங்கும்வகை
விரித்திட் டானல். (36)

உய்வதற்காம் வழியான வுணர்வுநூ லனைத்தையுமே
யோர்ந்த பின்னர்,
சைவமுதற் சமயநூல் சாற்றுமிய லிலக்கியமுஞ்
சதுராய்க் கற்றுத்,
தெய்வமணிக் கந்தனது திருவடியைத் திருமுமற
வாமற் கொண்டு,
பொய்தருமிவ் வுலகநடை புறக்கணித்துப் புண்ணியத்தை
மேற்கொண் டானல். (37)

பின்னரவன் றென்மொழியைப் பீடுபெறக் கற்றனயாம்
பெரிய ரெல்லா,
முன்னுபுகழ் வடமொழியு மோர்ந்திடுத லுணர்வினுக்கே
யூக்க மென்று,

மன்னுபுகழ் குருநாதன் மலரடியைப் போற்றியொரு
வகையாய்க் கூறி,
யன்னவன்ற னருணெபெற்று வருமறைசொல் தனிப்
யதையும் வாய்ந்த. [பெருமை, (38)

காசியெனும் பெரும்பதியைக் கடிதிலடைந்த தத்தலத்திற்
கருணை மிக்க,
மாசில்புகழ் விசுவநா தப்பெருமான் மலரடியை
மகிழ்ந்து போற்றி,
தேசுடைஞா நாநந்தத் தேசிகன்பா லாரியநூற்
செப்பா நின்ற,
வேசலிலா விலிங்கசந்நி யாசத்தை யெய்தியே
யிந்தி கற்றே. (39)

செம்மைதரு புரியென்னும் பெயர்பெற்றுச் சிறந்தமதி
சின்னுடன்னில்,
அம்மொழியி னியநூலு மதநூலுந் தருக்கமுத
லனைத்தினையு மருத்தியோடு,
இம்மைதனி லினிமைதரு மறுமையிலும் வீடீயு
மென்று போற்றிக்.
கொம்மையுடன் கடிதிலே பயின்றனனக் குருவினருள்
குலவு மாற்றல். (40)

தென்மொழியும் வடமொழியுஞ் செப்புபிற மொழிகளையுந்
தேர்ந்து நாளும்,
நன்மைதரும் வேதாந்த சித்தாந்த நன்னிலையில்
ஞான நூல்கள்,
தன்மையுடன் கற்றவைபிற் றழைத்திடுசொற்
பொழிவாற்றுந் தன்மை யாலும்,
வன்மையுறு மிருமொழியில் வல்லுநனென் றொருபெயரு
மன்னி னுனல். (41)

வேறு

நல்வழி தன்னையு நயந்து நல்லிரு,
கல்வியை யிங்ஙனங் கனிந்து கற்றபின்,
பல்வழி பரவிடப் பயன்ப டுத்தினுன்,
சொல்வழி யிவனிடந் தோய்ந்துகற் ருர்பலர், (42)

காதலைக் கல்வியிற் காட்டி ஞர்தமை.
யோதலைச் செய்மினென் றுரைத்துக் கல்வியை,
யீதலைச் செய்தவ ரினிதி லங்கவே,
மாதரு மத்தினை மதியிற் செய்திட்டான். (43)

முந்திநங் குரவனின் முநிவி லானையா,
வந்ததிக் கல்வியென் றுணர்ந்து வாழவன்,
அந்திய முறுதிருக் களரியை யடைந்துமே,
சிந்தையி லவன்பணி செய்ய வெண்ணியே. (44)

தன்குரு நாதனின் ருவில் மாபுகழ்,
நன்கமை வீரமா ஞாந தேசிகன்,
பொன்புக ழோடிரும் புவியில் வாழ்ந்ததை,
யின்புடன் கண்டுகேட் டினிது ணர்ந்துமே. (45)

பாரமர் மக்கடம் பயனை நாடியே,
யாரண மென்னவு மரிது போற்றிட,
வீரமா முநிவனின் விறல்விளை யாடலைச்,
சீரமை புராணமாய்க் கவியிற் செய்தனன். (46)

மற்றுமப் புராணமு மதிமி குத்தவர்,
குற்றமதென் றுன்னியே யுரைநடை தன்னையு.
முற்றுறச் செய்துமுற் கோவி லூர்தனின்,
நற்றவர் நால்வர்நால் மணிமாலை நவின்றனன். (47)

வெற்றிகொள் வீரமா முநிவன் றன்னையும்,
பெற்றவர் வளர்த்திடு பெருமை கண்டுபின்,

உற்றிடு பிள்ளையந் தமிழது முரைத்தனன்,
பற்றுபல் வகைப்பிர பந்தமு மாற்றினன். (48)

பற்பல நூல்கடாம் பாரிற் செய்தவன்,
நிற்பதோ ரிடமென நிலையி லாமலே,
சொற்பல விடங்களுந் தொடர்ந்து சென்றுமே,
கற்பதி லாசையைக் காட்டி னூர்க்கெலாம். (49)

எழுமையு மின்பரு ளினிய வித்தையைக்,
கெழுமிய வன்புடன் கேட்க வீந்துதான்,
விழுமிய நற்புகழ் விளங்கு சென்னையை,
முழுமுத லருளினுன் முடிவி லுற்றனன் (50)

சென்னைமா நகர்தனைச் சேர்ந்த மாதவன்,
முன்னையூ ழென்பது முனைந்து கூட்டலா,
லன்னையா மென்றுதா னரும் போற்றிட,
வுன்னிடு தண்ணளி யுயர்ந்து நின்றிடும். (51)

முத்தவா நந்தனு முதல்வன் சொற்படி,
யித்தரை தன்னிலே யிலகிடும் வடமொழி,
மெத்தவும் பரவியே விளங்கு மாறுதான்,
வித்தியா சாலையை விரைந்து கண்டனன். (52)

அராமதி சூடிடு மண்ணற் போற்றுவோன்,
றராமலி கீர்த்தியான் றரணி யோரெலாம்,
இராமசா மீஇயென வியம்பு நாமத்தால்,
விராவிய வள்ளலும் விழைந்து கண்டனன். (53)

கண்டவன் றன்னையக் கருணை யாளன்றுன்,
மண்டிய வன்புடன் மதித்துப் போற்றியே,
மிண்டிய பெரும்புகழ் விளங்கு வேதத்தைக்,
கண்டிடு செந்தமிழ்க் கலையி லென்னவே. (54)

அன்னதற் கிசைந்துமே யவன்செய்நற் பணியதில்,
மன்னிட மகிழ்வது மறைமொழி பெயர்த்திட,
உன்னின னங்குறைந் தொருமறை நான்கெனப்,
பன்னிடு வியாசனின் பாடி தன்னிலோர். (55)

தவப்பிர காசத்திற் றனக்குமே நேரிலா,
சிவப்பிர காசனின் சிறந்த காதையை,
உவப்புடன் தமிழ்நடை யுரையி லாற்றியே,
பவத்தின ருணர்ந்திடப் பரிவி லீந்தனன். (56)

வச்சிர சூசிகை யெனவிவண் வழங்கிடும்,
மெச்சுப நிடதத்தை விரைந்து செந்தமிழ்,
நச்சிடு மக்களின் நலத்தை நாடியே,
அச்சிட மொழிபெயர்த் தருளி னனரோ. (57)

சங்கர வாரியன் றரணி தன்னிலே,
யெங்குநல் வெற்றியை யிசைக்கு நூலையும்,
இங்கிதத் தமிழதி லியற்றி யித்தரை,
பொங்கருள் பெற்றிடப் புகழ்ந்தளித் தானரோ. (58)

மற்றுமே ராயவே லூரில் மன்னிடு,
முற்றதோப பாவெனு மொருபெரி யார்தனின்,
முற்றுமா றருந்தமிழ் மொழியிற் செய்துமே,
கற்றபேர் மகிழ்ந்திடக் கனிவி லீந்தனன். (59)

இன்னணஞ் சைவநல் விளக்க மெய் கண்டவன்,
சொன்னநற் சிவஞாந போத சாரமும்,
மன்னதன் விருத்தியு மதியிற் செய்துளான்,
இன்னுமெண் கண்ண தென்னு மிருந்தலங் தன்னில் வாழும்.

வேறு

அறுமுகக் கடவு டன்னி னரியநற் புராணந் தன்னை,
பெறுதமிழ் தன்னில் மொழியது பெயர்த்து வைத்து,

உறுமெட்டி குடிய தற்கு மொய்பறு புராணஞ் செய்து,
சிறுமையி லாங்ம நாதன் லீலையுஞ் செய்திட் டானுல் (61)

இப்படிப் பலவா நூல்க ளிடையினி லியற்றி யீந்து,
மொப்பிலாப் புகழ்சே ரீச னுலகினுக் காற்றி வைத்த,
செப்பரு மகிமை வாய்ந்த சிறப்புள வேதந் தன்னுள்,
மைப்படி கண்ணுள் பாகன் மலரடி யிசையி னுலே. (62)

போற்றிடு சாம வேதப் பொருளதைத் தமிழி னுலே,
ஏற்றிட வியற்றிப் பின்ன ரெசுரதை யாகஞ் செய்யும்,
ஆற்றினி லியற்றி யவ்வா றகன்றிடு மிருக்கு மாக்கி,
சாற்றிடு மதர்வ ணத்தைத் தண்டமி ழதனுற் செய்தான். 63

ஆரிய வேதந் தன்னை யருந்தவ வியாதன் முன்னுள்,
பேரியல் நான்க தாகப் பிரித்தனன் சிவாநந் தப்பேர்,
சூரிய போதத் தன்னுன் குறைவறத் தமிழாற் செய்தான்,
சீரிய கலியு கத்து வியா தனுய்ச் செப்பு வாரால். (64)

செய்வதற் கரிய தான செயலதைச் செய்கின் ருேரே,
உய்வதற் குரிய வோதும் பெரியரென் றுரைக்கு நூலும்,
எய்துதற் கரிய வேதத் தின்னெலி கேளா தார்க்கும்.
ஐயமற் றிடவு மத்தை யறிந்திடற் களித்தான் மாதோ (65)

காழியில் வந்திட் டோனுங் கவின்பெறு மொருவ னேடு,
மாழியிற் கல்லே தெப்ப மாய்க்கரை யேறி னுன்ருன்,
யாழினைப் பழித்த யம்மை யாரது நாத னுன,
வாழிய வீசன் றன்னை வளமுடன் காண்க வென்றே. (66)

மறைகளான் மூடப் பட்ட மாண்பமை கபாடந் தன்னைத்,
திறந்திடச் செய்ததான சீர்மலி செயலே போலம்,
மறைந்திட வைத்த தாலே மறையெனும் வேதந் தன்னைச்,
சிறந்திடு தமிழி னுலே திறந்தனன் சிவாநந் தன்ருன். (67)

மறைக்காட்டில் வந்து நான்கு மறைக்காடு போற்று மீசன்,
மறைப்பிலா வருளி னாலே மறைக்காட்டில் வளர்ந்து [மேலாம்,
மறைக்காட்டை யோதி நாளு மறைப்பறு மறிவி னாலே,
மறைக்காட்டை மறைக்கா வண்ண மக்களுக் கீந்தான் [மன்னோ. (68)

வேதமுந் தமிழி லிந்நாள் விளக்கமாய் விரிந்த தாலே,
பூதலத் தமிழன் மக்கள் பொருடனை யறிந்து நாளும்,
ஓதலில் மகிழ்ச்சி வந்து வோதியப் பொருள தான,
மாதுமை யீச னார்தம் மலரடி மருவி வாழ்வார். (69)

தண்டமிழ் மக்க டம்மைத் தயழ்ந்தவ ரெனவுங் கொண்டு,
பண்டைய நாளு மின்னார் பகர்மறை யோசை கேட்கில்,
அண்டிய யீய நீரை யவர்செவி தன்னில் வார்க்குந்,
தண்டமு மறைப்பு நீக்குந் தண்ணரு டழைக மாதோ. (70

வேதத்தைத் தமிழிற் செய்த வித்தக னாகி நிற்கும்,
போதமார் சிவாநந் தப்பேர் பூண்டவ னினிது வாழி,
நாதனு யதற்கு வேண்டு நன்மைசெய் தோனும் வாழி,
மாதுமை யீச னரு மகிதல மெல்லாம் வாழி. (71)

வேத மொழி பெயர்ப் பாசிரியரும், வீரமாமுநிவர் புராண முதலான பன் னூற் செய்தவரும், மற்று மெண்ணினூ லியற்றியவரு மாகிய, காசி வாசி, சிவாநந்த யதீந்திர சுவாமிகளின் சரித்திரம்.

*(முற்றுப் பெற்றது.)*

*முருக னரு டழைக.*

உ

## ஸ்ரீ வீர ஞாந தேசிகர் தோத்திரப் பத்து.



சிவனடி யார்கள் செல்வமே சிவமே
சிவப்பணித் தலைவனே சேர்ந்தோர்,
பவகடற் புணையே பக்குவர் ஞாநப்
பரிதியே பரவுப காரத்,
தவவுடற் ருங்குந் தாயினு மினியாய்
தமியனே யாள்வது மென்ருே,
அவமிடாத் தலமாந் திருக்கள ராண்ட,
வண்ணலே வீரதே சிகனே

அருளா ளன்பு வகப்புறத் துறவு
வறிவுசா லண்ணலே யன்பின்,
திருவருட் டெளிவே தீவினை களைந்தோய்
திகழ்மறை முடிவையுந் தெரித்தோய்,
இருவினை தேய வென்றனக் கருளி
யென்றுநீ யாண்டுகொள் வதுவே,
தருமலி தலமாந் திருக்கள ராண்ட
தன்மையோய் வீரதே சிகனே.

புத்தியுள் விளக்காம் பூரணப் பொருளே
புண்ணியம் போற்றுவோர் புகலே,
சித்தியின் றேற்றே சிவகுணஞ் செறிந்த
சித்தனே சித்தமார் தேனே,
முத்தியுன் முதலே முநிகண வரனே
மூடனே யாள்வது மென்ருே,
நித்திய தலமாந் திருக்கள ராண்ட
நிருமலா வீரதே சிகனே.

ஞாநமே ஞால ஞாநநன் மணியே
 ஞாநிக ளுதனே ஞாந,
மோநமே முடிவே முழுமதி மதியோய்
 முப்பத முடிவதாய் நின்ற,
தாநமே தவமே தவத்தவர் தலைவா
 தவறனை யாள்வது மென்றோ,
ஊநமீர் தலமாந் திருக்கள ராண்ட
 வொருவனே வீரதே சிகனே. 4

அரியதாம் வீட்டை யடைந்தவா வடைவோர்க்
 காருயி ராகிய துணையே,
பெரியனே பெரிதிற் பெரியதாம் பிரமப்
 பேறனே பிறவெலாக் கருமக்,
கரியனே கண்ணே கண்ணுளோர் மணியே
 கடையனை யாள்வது மென்றோ,
உரியதோர் தலமாந் திருக்கள ராண்ட
 வும்பனே வீரதே சிகனே. 5

குணமெனுங் குன்றே குன்றின்மேல் விளக்கே
 குணுதீ தனுகிய குணியே,
மணமலர் போல மநத்துளே யுறைவோய்
 மாயையின் றோற்றமா மனைத்துங்,
கணமதின் மாறல் கண்டவோய் காட்டிக்
 கடையனை யாள்வது மென்றோ,
திணமதார் தலமாந் திருக்கள ராண்ட
 தேவனும் வீரதே சிகனே. 6

வீரனே விமலா விளங்கிழை யிடையார்
 வேட்கையும் விட்டற நீத்த,
தீரனே தீரத் திநகரா திரண்ட
 தித்திப்பிற் றெவிட்டிடாத் தேவே,

சாரமே சமமே சமமுளார் தமமே
சழக்கனை யாள்வது மென்றோ,
நீரமார் தலமாந் திருக்கள ராண்ட
நேர்மையோய் வீரதே சிகனே, 7

புகழுளோய் புகழிற் புத்தியே யற்ற
புண்ணியா புன்புலா லுடம்பை,
யிகழுவோ யிகழு மேற்றலா யேற்போ
யிருவினை யொப்பனு யென்றுந்.
திகழுவோய் தெருளோய் தீவினை தேய்த்துத்
தீயனை யாள்வது மென்றோ,
நிகழுசீர் தலமாந் திருக்கள ராண்ட
நித்தியா வீரதே சிகனே. 8

என்றுமுன் னடியே யேற்றவு மேற்றி
யிடையின்றி வாழ்த்தவும் வாழ்த்திக்,
கன்றுவா வென்னக் கனியவுங் கனிந்து
கலக்கவுங் கலந்துவா நந்தம்,
ஒன்றதாய் நிற்க வுனதரு ளீந்து
வுலுத்தனை யாள்வது மென்றோ,
நன்றுசார் தலமாந் திருக்கள ராண்ட
நாதனே வீரதே சிகனே. 9

ஒன்றதே பொருளா யொன்றுமெய் யுணர்வா
யொன்றதே முத்திசா தநமாய்,
ஒன்றதே யிறப்பா யொன்றதே மறக்கா
தொன்றதா முன்னடி யதனில்,
ஒன்றதே யாகு மொருமுத்தி யருளி
யொருவனை யென்றுநீ யாள்வாய்,
மன்றதே யாகுந் திருக்கள ராண்ட
மாண்பனே வீரதே சிகனே. 10

(முற்றிற்று)

வீர ஞாந தேசிகர் திரு வடி வாழ்க.

உ
முருகன் துணை.

# கோயிலூர்

# நால்வர் நான் மணி மாலை.

---

## நால்வர் துதி.

முத்திரா மன்னீத்தான் முந்நீர்க் கருணையான்
சித்திவீ ரன்றாளைச் சேர்.

ஈண்டுக் கோயிலூர் வேதாந்த மடாலயத் தலைமை பெற்று விளங்கின அத்துவித வாசிரியர்களான நால்வருள் ஆதி குரு மூர்த்த மாகிய ஸ்ரீ முத்தி ராம லிங்க ஞான தேசிகருக்கு வெண் பாவும், துற வாண்டவ ரென வழங்கும் அருணுசல ஞான தேசிகருக்குக் கலித் துறையும், கருணை நிதி யென்னுஞ் சிதம்பர ஞான தேசிகருக்கு விருத்தமும், திருக் கள ராண்டவ ரென்னும் வீர சேகர ஞான தேசிகருக்கு, அகவலு மாகப் பாடப் பெற் றிருக்கின்றமை காண்க

---

## வெண்பா.

சேந்தன் றிருச்சிக்கற் றேசிகனுஞ் சீர்கடற்கண்
மோந்தன்று மெய்யுணர்வை முற்பவத்தின்-காந்தலது
தீரக் கழசிவயற் றெண்ணீராய்ச் சேர்த்தாண்ட
காரணைய முத்திராம கார். 1

## கலித் துறை.

முத்தியின் முற்றளை யென்னுமுக் காதலை முற்றெழிக்குஞ்,
சித்தியைச் சிந்தித்துச் சீரார் நெடுங்குடித் தேவனிட,

மெத்திசை நத்திட வில்லைத்து றந்தாண்ட வினியவனே.
யொத்துள ரிப்புவி தன்னிலு முண்டுகொ லோர்ந்திடினே. 2

விருத்தம்.

பரஞானி விழியதனிற் பந்தமது தொலையுமெனப் பகரக் கேட்டேன், றிரமான சிதம்பரநின் னிடத்ததையுந் தெளிந்துமிகத் தெரிந்து கொண்டே, னுரமாரு மொரு குரவ னொளிர்விழிக ளுறவுனக்கு மொழிந்தே பந்தந், தர மாய தனியுணர்வு முதித்தவந்தத் தன்மையினுற் றமிய னேனே. 3

அகவல்.

அறமக ளுதிய ரைவருட் சிறந்து
திறமுறக் கீதை தெளிந்து கண்ணனிற்
பிரமாத் திரத்தாற் பெரும்பகை கடிந்து
தரமாய்ப் பெற்றுத் தனது ராச்சிய
முரமா யாண்ட வொருபெரும் வீரனே
புதுவயற் ரேன்றிப் பூண்டைவ ரிற்புகழ்
தத்துவ ஞாநிதன் சரணதை யடைந்து
வசிட்ட னுரையை வளம்பட வாய்ந்து
பரமாம் பிரமப் பழிப்பிலத் திரத்தா
லுலக மூன்றையு மொருதிர ணத்தி
லிலக வென்றே யிடரிலின் பத்தை
யென்று நித்திய ளுகி யேய்ந்த
குன்றெனு மநத்திற் குணமுறு வீரனே
எவன்சி றப்பி லேற்ற முள்ளவன்
ருவி னுரைக்கத் தக்கவர் யாரே
கோயி லூரின் குணமறிந் தோரே. 4

## வெண்பா.

அன்பா லரனுரி னப்பன்று ளீர்ந்தருள்சேர்
வன்பான் சிறந்தவனே வாழ்புவியிற்—றந்தாதை
காதைச் செவிடாக்கிக் காத்தவனே கண்டிங்கே
யீதையெ னக்கியம்பு வீர். 5

## கலித் துறை.

பரணியு முன்றனின் பற்றைத்து றந்திடும் பக்குவத்தை,
முரணற வீந்தது முப்பற்றை நாயேற்கு முற்றளித்த,
தரமுறு நல்குர வான்மணி காணினுந் தாழ்த்திடுவான்,
றிரமெழு நூலெதுந் தெள்ளியோய் நின்னைத்தி ரித்திடுமோ.

## விருத்தம்.

சீரார் கருணை வாரிதிநீ சிறந்த கல்வித் திறந்தெரிந்தும், பாரா
ரெனநற் பாடையியற் பண்ணு தொழித்துப் பரப்பிரம,
வோரா ரிலக்க ணுவிருத்தி யுரைத்த தென்கொ லுரை
யெனக்கே, யாரா ரென்னத் தன்னியல்பி னறிவே யியல்பா 7
மெனுமாறே.

## அகவல்.

கோயி லூரைக் குறுகிக் குணக்கடன்
மூழ்கிய வீர முநிவன் பணியைப்
பணிப்பூ ணுளன் பணியாப் பரம
னணியாக் கொள்வ னன்றி மற்றவர்
பணியைப் பணியப் பரிவிலா தேற்பனே. 8

## வெண்பா.

காளி தனைக்கழிக்க கல்யாணி யைவழுத்த,
நீளிதய மன்றகத்தி னேர்ந்தாயிந்—நாளின்,

மருணீக்கி நாயேன் மருவுதெரு ளோங்க,
வருணீமுத் திராமவெனே யார்ந்து. 9

### கலித் துறை.

மண்ணு டதைவிட்டுத் தண்ணு டடைந்திட்ட மாண்பத
னுல், வெண்காட் டரனிற்கு வேண்டங்ந மீந்ததிம் மேதினி
யிற், பண்பா யுனக்கவ னேற்குமு னீயாத பண்பெதுவோ,
கண்கூ டெனவுயிர் காத்திடு வானன்புக் கண்மணியே. 10

### விருத்தம்

வெறுக்கை தொடாத துறவிதனே விழைந்தே யடிமை
கொண்டதுபோற், பொறுக்கை புகழுந் தனமுமுள புணி
யன் நீயும் வேண்டுமென, நிறுத்து நினேயு மடிமைகொண்
டான் நெல்லே யம்மை நினேவோடு, வறுத்துப் பவத்தை
யருள்செய்ய வன்பாற் றேடு மாரியனே. 11

### அகவல்.

பிரமன் சபையிற் பித்தன் சேயாற்
குடிலே யுணராக் குற்றங் களேயச்
சிறைபடு மவனே சிறப்புளன் சீரார்
பிரம சபையிற் பெரியவ னுகிப்
பிரணவப் பொருளேப் பிறங்குயிர்ச் சேய்கட்
கெளிதி லுணர்த்தி யிரும்பவச் சிறையை
முழுது மொளித்து முத்தி யீந்த
வீர சேகர னென்ன விளங்கு
ஞாந தேசிக நாதன் குருனே
வோதுமி னுணர்ந்து வுண்மை யாகவே. 12

### வெண்பா.

பற்றெறிந்து முத்தியதைப் பற்றியதோர் ஞானியிடம்
பெற்றதவ ணெற்காத்த பேரன்பா—ஞற்றிடுமோர்
கல்லால யம்பூசை காணிற் கடவுவே
னல்லான்முன் வாராள வள். 13

### கலித் துறை.

காவியு டுத்திடக் கற்றோரும் வேண்டிடக் காசினியின்
மேவிவி டுத்தலை மெய்ச்சீரின் மேன்மைய மேலருணை
தாவிந டந்திடு தண்ணெறி தன்னிலத் தானையதை
பாவிந லமொழி பண்பினில் விட்டதென் பகரெனக்கே 14

### விருத்தம்.

அடைவினி லொருவ னருமனை பிரிந்து வடைந்திடி னவ
னன் புபோல, தடையதிற் குரவன் றன்னையும் பிரிந்தத்
தலைவனைத் தானணை யுனக்குக்,கடையறு மன்பிற் கதியதுந்
தோற்றுங் கடையஞ யிருக்கவே யானு, மடைவது மெளி
தோ வரியநற் கருணை யார்கலி யண்ணலே யந்தோ. 15

### அகவல்.

சடை புலிச் சருமந் தண்டங் கரக
மடைகல் லாடை யணிமெய்த் துறவி
னடிக்குஞ் சிவனு நாரியை நயந்து
வடிச்சுவ டமுந்த வன்று வணங்கி
முலையுறத் தழுவிய முரணற மோகம்
விடுத்துப் பற்றும் விமல மடைந்தே
யொடுக்குந் தன்மந வொப்பில் சிறையிற்
படுத்தி மகளிர் பருவக் காம
மடக்கு முறையை யங்கவர்க் குணர்த்தவுங்

கடந்தபூ வாளிக் காமனை வென்றதோ
வெனக்கு மிடரை யியற்றிய தென்னைகொ
லென்னு மாநத் தொழுந்த தன்றி
யுன்னு காம முருத தாலிலை
யென்னத் தெரிக்கவு மித்தரை தன்னிற்
பன்னு சுகனிற் பண்பாய்த் தோன்றிய
வென்னிரு கண்மணி யாகிய வீர
சேகரன் ருளைச் சேரின் சேரார்
மோக மென்னு மூட மயக்கே. 16

வெண்பா.

மனையி யற்றுவான் மனையின்மா கருப்பந்தங்க
மனையிற்றீ மன்னவைத்த மாண்போய்—மனைமாதை
யன்னையென் றெண்ணேனை யன்னைக்க ருப்பத்தி
லின்னும்வா ராமலே யேல். 17

கலித் துறை.

இடமதை விட்டவ ரின்னுவும் வந்துறு மென்றுணர்ந்தும்,
மடமதைப் பெற்றிட மன்னிச்சை கொள்ளவிம் மாநிலத்
திற், றிடமுறு சிற்பொது தன்னிற்றெ ளிவிலாக் கேணி
மடச், சுடர றுகல்லார்சு ரங்கத்தில் வாழத்து ணிந்ததெனே.

விருத்தம்.

அருள்சிவ னன்பு மகத்தின்மெய்த் துறவு மடைவரு மறி
வது மற்றும், பெருமிதம் பலவும் பிறங்கிடு புகழப் பிறருப
காரத்திற் பிரிய, கருதருங் கழனி நகருறை கருணைக் கடல
நின் கனமுயல் வின்றேற், குருபர சங்க மங்களிப் படியிற்
குலவிடு மோகுருத் தலத்தே. 19




அகவல்.

பரவை தன்பாற் பரிவி லிடர்ப்பட்
டழுங்கு மவனை யரனு மன்பாற்
றோழமை கொண்டான் றூயவெ னெந்தை
யரிவை யன்பா ரவன்கோ னென்னினும்
பெரிய வின்பம் பெயர்த்து வீயினுங்
கோடியி லாபந் தேடிக் கொடுக்கினுந்
தன்னு விக்கொரு தனித்துணை யென்னினு
மென்னே விவனெரி நட்பா லாத
லுன்னு மதுரக் கனியு முப்போடு
சின்ன நட்புச் செயினுஞ் சீர்கெடு
மன்ன வெற்கு மணுவும் வேண்டிலை
யென்ன வீர சேகர னெற்றியே
தள்ளி விடுவன் றனித்துற வேந்தலே. 20

வெண்பா.

ஓங்கோ ரிடமாற்று மோரையதி லோர்தேவி
தேங்கா யளித்த திறந்தேரின் — நீங்காம
லன்னையினு மன்புமிக வாதரித்தா னம்மைதனை
யென்னையிவ னுண்மையி யல். 21

கலித் துறை.

பாவல னென்னமுன் னாவலன் பானீ பழகினையோ
சேவதி லூர்பவன் சீரடி யேபற்றிச் சேர்துறவின்
காவல னென்றுன் கழலடி யேற்றக்க சிந்துவந்து
தாவறு மன்பினிற் றுனடைந் தான்கொல் தனித்துறவோய்.

விருத்தம்.

சிதம்பர மூலட் டானன் றிருப்பணிச் சீர்கள் செய்து
பதந்திரு கோவி லூரிற் பணிபல பரிவா லாற்றி

நிதமுவே தாங்த நூல்கணி யதியி னேர்வார்க் கோதி
யிதமுற வோங்கவைத் தாயென் னென் பேனினது
[மாண்பே. 23

அகவல்

அண்ண லொளியா யமர்ந்தே யன்று
கிண்ணந் தன்னிற் கிளர்ஞா நப்பா
லுண்ணு மொருவற் கோருருக் காட்டித்
தண்ணிய தன்னடி தானடை வித்த
லென்கொ லெம்மிறை யென்னும் வீரற்
கன்பிற் சித்துரு வதிலே யடைய
முன்பு வந்து முத்தி கொடுத்துத்
தன்பாற் சேர்த்த தகுதி யென்னேயோ. 24

வெண்பா,

நின்ருய்பாற் கோட்சொல்லி நேராய்ப் பணிகொண்டு
வன்ரு டிருநெல்லே யம்மையோ—கன்ருவி
லம்மையா ரையேற்றே யஃதுரைத்த வன்னேயோ
செம்மையாண் முத்திராம செப்பு. 25

கலித் துறை.

பாடுங் தொழில்விட்டுப் பன்னூல்கள் பார்த்துப் பழம்
பொருளேத், தேடும் பணிகொண்ட நாவலன் றன்னேயுஞ்
சீர்திருத்தக், கூடும் பெருமன்பு கொண்டதா லேயுன்றன்
கூர்புகழை, நாடுங் தொடர்பதும் பாடின னற்றவ
நானறிங்தேன். 26

விருத்தம்.

வேடங் கொள்ளல் வீண தென்று வேத மும்பு கன்றிட
மூட ரிங்கு காவி தேடி மோக மேவி நிற்பது
நாட லின்றி வேட மேவு நல்லர் போல நாதநீ
யீட ணேக ணீத்தொ ழித்து மேல வில்லே யென்கொலோ.27

### அகவல்.

இப்புவி தன்னி லெழிலார் ஞானியும்
பற்பலர் மற்றும் பரனை விழைந்தே
யெக்கா லுன்ற னிணையடி யெற்கு
நக்கா நீயு நயத்த லென்று
பேறதை யறியப் புந்தி கொண்டு
கால வெல்லை கடவிக் கருத்து
ளோது மரிய வொருவனைப் பழிச்சின
ரெந்தை வீர சேகர னென்பான்
முந்தி யாதியின் முகிழடிக் கமல
மொன்றும் வேளை யுண்மையு ணர்ந்தே
யின்றே யடைவ னென்பது மறிவித்
தென்று மின்ப விறைவ னடியை
யேற்றிப் போற்றி யினிதடைந் தானே. 28

### வெண்பா.

இருடிபோ னீயிருக்க வேறின்மேற் கொற்றவா,
டிருடிஞன் முன்னின்ற தென்னை—மருடிமிரன்,
முன்னின்று போற்றியு முன்னிற்கா தென்னைகொ,
லென்னென்று சொல்வேனே னை. 29

### கலித் துறை.

மாணவர் நன்னெறி மாண்புற வோங்கிட மாவன்பினுற்,
பூணவு மற்றவர் போந்தவி ளவற்கும் புந்தியதிற்,
றேணவுந் துய்யநற் சிடரா சாரத்தைச் சொன்னையதுந்,
தூணதி லின்றுந்து ணிவுற்று நின்றவுன் றெல்புகழ்போல்.

### விருத்தம்.

தங்கிப்பெ ருந்துறை தன்னிற்றி யாநந்த ரித்திடநீ,
யங்கவ்வ டியென வன்புரு வாமெனு மண்ணலவன்,

பொங்கு குருந்தையிற் பொலிந்தன னென்கொல் புகழதுவு,
மிங்கத்தி ருவரு ளிருத்தலி னின்னிட மெற்கையமே. 31

அகவல்.

பாரிற் பல்லோர் பரம பதத்தைச்
சேர றன்னைச் சில்லோர் களுமே
நேரிற் காணூர் நிமல வீர
சேகர னூர்திருத் தேரிற் பல்லோர்
மாசறக் காண மாசிர்ப் பதத்தை
யடைத றன்னை யரகர வொலியொடு
தடையறக் காட்டித் தானடைந் தனரே. 32

வெண்பா.

ஒட்டப்பத் தைச்செருகி யொள்ளியதீ மூட்டினுன்,
வீட்டில் வெறிதாக மெய்த்துறவி - நாட்டி,
னீற்று லொருமனையை நீருக்கி நீள்வினையை,
மாற்றிம கிழளித்தாய் மன். 33

கலித் துறை.

மும்முறை தன்மேனி தீண்டுகின் ருனுகி முன்புவந்து,
தம்மன வன்பிற் றனிமுத னிற்கன் று சாற்றியதைச்,
செம்மையி லாய்ந்திடிற் சீரன்பர் சிந்தையிற் றிகழுமது,
மிம்மணி லையமென் றெண்ணவு மென்னுள மேற்றிடுமோ.

விருத்தம்.

கண்டாருங் காணுருங் கனிந்தோருங் கருணைநிதி யான
[வுன்னைப்,
பண்டாரஞ் சாமிமுதற் பலப்பலவாம் பட்டமதாற் பகர்ந்தி
[டாம,

லுண்டாய வூனமிலா வுணர்வுடையோ ரொழுக்கமா
[முணர்வி லார்க,
ளண்டாத வையாவென் ரேதலெனை யறைந்திடுக
[வரிய தேவே. 35

அகவல்.

ஆலய மொன்றை யன்பாற் செய்யக்
கோவின் றனத்தைக் குதிரை யேற்கக்
கொண்டு சென்று குறுநரி தன்னை
மண்டு பரியின் மயங்கக் காட்டி
நடலை யாற்றி நற்பொரு ளீட்டி
பெரிய துறையின் பித்தனுக் கொருசிறு
வரிய வாலய மாக்கின னொருவன்
வீர சேகர விமல மாதவன்
றீர மாகத் திருவார் வணிகரிற்
றிரண்ட வித்தந் தெள்ளிதிற் றேடி
யிரண்டா லயமு மெழிலுறச் செய்தான்
கொற்றன் வாளைக் கொண்ட கோமான்
பற்றில் வாழ்ந்து பாலிக்க வொன்று
மறுப தாயிர வருந்தவர்க் காகப்
பிரம தாண்டவம் பேரன் பாலே
செய்த களரியிற் றிகழும் பாரி
சாதவ நேசன் சார வொன்றுமே. 36

வெண்பா.

முத்தியுறல் கண்டுமே முன்னுரைத்து முத்தியடை,
முத்திரா மன்பதத்தின் முந்தியே—முத்தியதை,
வேண்டுவார்க் காகுமதும் வித்தையொடு மேன்மையுமா,
மாண்டிடுவர் முத்தியர சாய். 37

### கலித் துறை.

துறந்தா ரவர்களுந் தோன்றித்து றப்பாருந் தூயதிலே,
யிறந்தா ரெவர்கட்கு மின்பீயு முந்த னிணையடியை,
மறந்தா ரெனின்மதி வாய்ந்திடா வாழ்நலம் வன்பவத்திற்,
பிறந்தே யுழலுவர் பேறெதும் பெற்றிடார் பெருநிலத்தே

### விருத்தம்.

சிதம்பரத்தின் சீர்தெரிந்து சிதம்பரத்திற் பணிசெய்த,
சிதம்பரன்ருள் சேராதார் சிதம்பரத்தாற் றிகழுமிந்தச்,
சிதம்பரமாஞ் சீருலகைச் சிதம்பரமாய்த் தெரிசியார்,
சிதம்பரமாம் வீடதையுஞ் சேரார்கள் செனித்திடுவார், 39

### அகவல்.

முத்தி வேள்வி முற்றச் செய்து
முத்திப் பேற்றின் முயலு மாந்தர்காள்
சித்தியு முற்றிடு தேசிக வீரனை
நத்துமின் நன்மையு நாளும் வருமே. 40

---

கோயிலூர்

*நால்வர் நான் மணி மாலை முற்றிற்று.*

*குருபர னடி வாழ்க.*



உ

திருக் கள ராண்டவர் என்னும்,

# கோவி லூர் வீர மா முநிவர்

# பிள்ளைத் தமிழ்.

ஆனை முகன் துதி.

சிவன்முடிக் கணியதாய்த் திகழ்தருங் கங்கையைச்
சிவையுமுறு மூட றணியச்,
செப்பருங் கௌதமன் தவம்வளர் சீடனுய்ச்
செய்தவோர் சூட்சி யதனுல்,
அவனியி லழைத்திட வன்னவர்க் கருளியே
வம்மையா ரூட றனையும்,
அகற்றியங் கன்னைக்கு மப்பர்க்கு மன்புசெ
யானைமுக னைப்ப ணிகுவாம்,
உவமையறு குரவனு யுணர்வரும் மறைமுடியி
லொளிர்கின்ற வொரு வத்துவை,
உள்ளத்து ணர்த்திவரு பவமாற்றி யாண்டுமே
யுலப்பிலா வின்ப மீந்து,
தவமதிற் சிறந்திடுந் தகுஞாந வீரனுய்த்
தண்டிருத் தளியில் வாழ்ந்து,
தண்பணை சூழ்திருக் களரதைக் காப்பவன்
தண்டமிழ்க் கவித ழையவே.

கவிகள் துதி.

தெய்வநூ றனைத்தந்த செந்நாப்போ தார்முதற்
றெளியுநற் கீர னுடனே,
திருவார கத்தியன் சீத்தலையி ரட்டையர்
திகழ்தரு மொட்டக் கூத்தன்,

உய்யுநூ லியற்றிய நால்வர்களு மாபதி
யொருதுறவி மெய்ம்மை கண்டான்,
உற்றுதா யானவன் ருண்டவ ராயன்மற்
றுள்ளவர்க ளைப்போற் றுவாம்,
செய்வதே யரியதெனுஞ் செயலதைச் செய்திவண்
சேர்வதற் கரிய முத்தி,
சேர்ந்தொளிர்சி வமதாய்த் திருக்களர் தனில்வளர்
செம்மலாம் வீர முநிவன்,
பொய்யதே யறுபுகழக் காதையைப் புண்ணியர்கள்
போற்றியே வாழ்வ தற்கும்,
பொற்புறும் பாக்களுங் கற்றோரின் முறைதோன்றிப்
பொற்றமிழி னிதுவ ளர்கவே.

கோவிலூர். நால்வர் துதி.

முத்தியே வடிவமாய் மூலமாய் முதன்மையா
முத்திரா மன்மொ ழிந்த,
மொழியினுல் முற்றத்து றந்திடும் முநிவன்முன்
முற்றுமே கோவி லூரை,
வித்தையால் விரித்திடுங் கருணைநன் னிதியவன்
விரைமலர்ப் பாதம் மேவி,
விண்ணதும் மண்ணதும் போற்றிடும் வீரமுநி
மெய்ப்பதந் தனைப் போற்றுவாம்,
பத்தியே வடிவதாய்ப் பரமனின் னடியிணைப்
பணியதே பயன தாகப்,
பாருலக றிந்திடப் பல்லரு ளாடலைப்
பண்ணியே பரம னடியிற்,
சித்தியாய்த் திருக்களர்ச் சிவமெனவி ளங்கியே
செல்வமு மளித்து மக்கள்,
செழித்திடத் திருவருள் புரிந்திடும் வீரமுநி
செந்தமிழி னிதுதி கழவே.

# 1. காப்புப் பருவம்.

## திரு மால்.

மணம்வீசும் மலர்நி றைந்து மகிழ்வுதரு
    வீரமெனும் மரத்தடியில் மருவா நின்ற,
மாண்புசால் வீரசே கரவீசன் மலரடிக்கண்
    மறவாத பத்தியால் மாநி லத்தில்,
குணமே றங் குருவாக வவத ரித்துக் குவலயத்திற்
    குறிக்க வொணுக் குறிப்பைக் காட்டிக்,
குளிர்புனல்சூழ் திருக்களரிற் குலவா நின்ற
    குருவாகு மெந்தைதனைக் குறித்துக் காக்கக்,
கணமேகுங் கருமுகிலாய்க் கடனீ ருண்டு
    கருதரிய வுலகமதைக் காக்கப் பெய்து,
கடனீரிற் றவழலைக்குட் கல்லால் விட்ட
    கரியவிலை தனிற்றுயின்று காப்ப தற்கே,
புணர்மாயை யதுகொண்டு புதிதாய்ப் பத்துப்
    பொற்பமையு முருவெடுத்தும் புநித மாகும்,
புண்ணியர்கள் போற்றுகின்ற புநித வாழ்வாம்
    பொங்குமங் கலம்பொலியுங் கரிய மாலே. (1)

## வலம் புரி விநாயகர்.

சத்தெனுஞ் சங்கரன் சார்சிவந் தன்னிலுஞ்
    சத்தியாய் நின்றதோர் தேவியாஞ் சித்திலும்,
புத்திர னென்றுபேர் பெற்றிடுங் களரிவாழ்
    பொற்பமை வலம்புரிக் களிற்றினைப் போற்றுவாம்,
சித்திரப் பொலிவுறுஞ் செல்வநற் கோவிலிற்
    செல்வர்நல் வணிகர்கள் சிறப்புடன் போற்றிட,
எத்திறத் தும்வர மீந்துமே திருக்களர்க்
    கின்புசெய் வீரனு மெந்தையைக் காக்கவே. (2)

அறு முகக் கடவுள்.

எண்ணரிய கட லுலக மேழைப்ப டைத்ததனி
லின் னுயிர்க ளெண்ணில்பல கோடிக்கு யிற்றிடும்,
இன்பமொழி யொன்றையறி யாமற்பி ழைத்தருளு
மின்னளிக் கமலமல ரோனைச்சி ரத்தினில்,
பண்ணுசெயல் விட்டுவிட வோதியுங் குட்டியோர்
பங்கினில் மங்கையை நாட்டிடும் பரமற்கும்.
பன்னுமுறை நல்லவுப தேசந்த னைச்செய்த
பன்னிருகை வள்ளலடி பேணிப் பணிந்திடுவம்,
மண்ணவரும் விண்ணவருங் காணக்க ளிப்பதனில்
மன்றினட மன்றுமிக வாடிக்க ளைத்திடவும்,
மன்னு பெரு பண்ணவரி ஞேசைக்கு ரித்ததென
மட்டறுபல் சிட்டர்களு மாசைப்ப டற்குரிய,
வண்ணமுள திண்மையுறு சீர்கொள்தி ருக்களரில்
வந்தவடி யர்க்கருளு மீயுந்த வப்பயனில்.
வள்ளலெனும் நல்வணிக ராற்றுந்தி ருத்தளியில்
வத்துவுணர் முத்தனெனும் வீரன்ற னைக்காக்கவே (3

பாரிசாத வநேசர்.

விண்ணகத் திருந்தொளிர் பாரிசா தத்தருவை
விழைந்து துர் வாச முநிவன்,
விரைமலர் நிறைதர மண்ணகத் திருத்தியே
விளங்கிடு மதநி ழற்கண்,
மண்ணிறு லிலிங்கமாய் வைத்தருச் சிக்கவே
மகிழ்வுற்றக் களரி தனிலே,
மன்னிடும் பாரிசா தவநத்தி லொளிர்கின்ற
மாதே வனைப் போற்றுவாம்,
கண்ணெனு மத்தலங் காடெனல் கேட்டது
கருத்துடன் கடிதில் வந்து,
காட்டைக்க ளைந்துமுன் கேட்டவா கல்லிறுற்
கைலையெனக் கண்டு கண்முன்,

எண்ணறு மக்களு மிருந்திடத் தேரின்முன்
 னின்னிலையை யெய்தி யங்கு.
இன்பங்கொ டுத்தருளு மெழில்ஞாந வீரனு
 மெந்தையை யினிது காக்கவே. (4)

பிரமன்.

பரிவுடன் காத்திடுஞ் செயலது மரிக்கென்று
 பராமுக மின்றி யுலகைப்,
படைத்திடுஞ் செயலதை மேற்கொண்ட தாலொரு
 பகலிலுங் கணப்பொ ழுதுமே,
கருத்தினி லிருத்திடக் கவனமின் றெனலன்றிக்.
 கருத்துய ரொழிப்ப தற்கிவண்.
கலியினி லவதரித் தருட்செயல்தி ருக்களரில்
 காட்டுவீ ரன்றனைக் காக்க,
விருத்திசால் மகத்தினில் வித்தகர்கள் நால்வரை
 வெளியிட்டு மவர்க ளுள்ளும்,
வித்தைமலி வசிட்டனு லிராமனுக் குரைத்திட்ட
 விரிபொருள் ஞாந நூலின்,
அருத்தமுற் ருக்கிடுமு லகெலா மறிவோங்கி
 யத்துவித ஞாந மடைய,
அன்புசெய் தருங்கலை வாணியும கிழ்ந்திட
 வமருமல ரோனைப்ப ணிகுவாம். (5)

இந்திரன்.

ஐம்பொறி யவித்திட்ட வருமுநிவ னருள்வலி
 யறிஞர்கட் கினிது தோன்ற,
அங்கமொன் றினிலன்ற ளித்திடும நுக்கிரக
 மதனுடன் சாப மதுவும்,
நம்பிடும் படியுறுகண் ணுயிர நண்ணியும்
 நத்திடுமி யோகி யவ்வெண்,
நயந்துபல் மேகத்தை வச்சிரப் படையினு
 னலிக்கும ரியைப்ப ணிகுவாம்,

தும்புரு நாரதன் துர்வாசன் முதலானோர்
தொழுதிடத் தூய நடநம்,
துன்னிடச் செய்தருள் களரியிற் றுலங்கிடுந்
துகளில்குரு கோட்ட மதனில்,
இம்பரின் மக்களு மிடரறு மின்னிலையி
லிருந்துவாழ்ந் திடவ ருளிடும்.
இணையறுங் குருராச தவவீர மாதவனை
யெப்பகலு மினிது காக்கவே. (6)

திரு மகள்.

செல்வி யென் றிடுசொலின் செம்பொருட் கியையவே
செறியுநிலை யின்றி யேசெலும்,
செல்வமாந் தன்மையிற் றிகழ்ந்துதான் சென்றவிடஞ்
சினங்காம முதற்பல் தீமை,
புல்லியு மிடருறப் புரிந்துநல் லவர்கள்பால்
புக்கிடிற் புண்ணி யத்தின்,
பொக்கிஷம தாகியும் பொருவரு மின்பீந்து
பொலிதிரு மகளைப் போற்றுவாம்,
இல்லையு விடுத்துமூ வாசையை யிடித்துமே
யெழில்மறையும் பொருளை யென்றும்,
இன்புறத் தொடலது மிழிவென்றி சைத்திடும்
மெல்லை யின்படி யென்றுமே,
அல்லல்தரு பொருடதை யுங்கையிற் றொடாமலே
யளவிலாப் பணிக ளாற்றி,
அன்பார் பதம்பெற்றுக் களரியி லவிர்தரு
மண்ணல்வீ ரனைக் காக்கவே. (7)

கலை மகள்.

ஒலியா யெழுத்தாய்ச் சொல்லாகி
யுரைக்கும் வாக்கி யத்தொடர்வாய்,
உணரோ ரெழுதாக் கிளவியதா
யுன்னு மாக மங்களுமாய்ப்,

பொலியீ ரொன்பான் புராணமுமாய்
　　பொருந்துங் கலைக ளெலாமாகிப்,
பூபா லனுமிங் கவியரசும்
　　பொருத்தும் வாணி தனைப்பணிவாம்,
கலியோர் குருவாய்க் கருணையுடன்
　　கருவிற் புகுந்துங் கருமாற்றும்,
கடனே பணியாய்க் காணுலகங்
　　கடந்த கடவுள் கழறன்னை,
வலியா லடைந்து திருக்களரை
　　வாந நாடாய்ச் செய்தங்கு,
வாழும் வீர சேகரனும்
　　வள்ள றனையுங் காப்பதற்கே. (8)

அமுத வல்லி யம்மை,

வந்தடைந் திடுபவர் வன்பவம் வாட்டியே
　　வருமிறப் பதையு மென்றும்,
வாராத படியருள் வானநாட் டமுதமாய்
　　வளர்திருக் களரி மேவும்,
எந்தையா ரியற்றிய வெழிலுறுங் கோவிலி
　　லெண்ணிலா வுயிர்ப டைத்தும்,
இளைக்காத கட்டிளமை யெய்தியே யின்பரு
　　ளெனதமுத வல்லியையி றைஞ்சுவாம்,
பந்தமுற் றவர்கட்கும் பக்குவத் துறுகதியைப்
　　பரிவினி லளித்து நாளும்,
பற்றுருப் பான்மையும் பயந்தருள் பரமனும்
　　பரமுத்தி வடிவ வீர,
எந்தையை யிறைவனை யென்னுயிர்க் குயிர்தனை
　　யென்னிருகண் ணிலங்கு மணியை,
இன்புருவ வேந்தலை யிறவாத பேரின்ப
　　யின்னிலையை யினிது காக்கவே. (9)

முப் பத்து முக் கோடி தேவர்.

செம்பிற்க ளிம்பென்ன வுயிர்கள்மாட் டுற்றிடுஞ்
சிவனுருவின் மாயையாம் பேரிருட் டிரையதைச்,
செக்கர்வா னெழுந்தருள் ஞாநநற் பாநுவாய்ச்
சிதைத்திடுந் தேவமணி யைபவச் சூட்டினில்,
வெம்பிடுமு யிர்கட்குத் தண்ணிலவ ளித்திடு
விமலமுறும் ஞாநமாம் விண்ணின் மதியை.
வீரநற் குருமணியை வெளிக்குள்வள ருளொளியை
வித்தகற் கரசதை வேட்பவர் தருவதை,
உம்பரு முரகரு முருத்திரரும் வசுக்களு
மூண்துயி லற்றுலவு கந்தருவர் கின்னரர்,
உலைவுறும ருத்துவர் நாகர்கள் பண்ணவ
ரொளிருகிம் புருடர்கள் தும்புருவர் நாரதர்,
அம்பர ருந்தவ ரளவறுங் கணநாதர்
ரறைந்திடா தவருமா மந்தரத் தேவர்கள்,
அன்புறு முப்பத்து முக்கோடி பேர்களு
மருகிருந் தளியுடன மர்ந்துகாத் திடுகவே. (10)

1. *காப்புப் பருவம் முற்றும்.*

---

## 2. செங் கீரைப் பருவம்.

செந்தாம ரைக்கண்ணன் திருத்தடங் கையினிற்
செறிவெண்ணெ யேந்து சீரிலும்,
செருக்கொளுமு யலகனைத் தாளால்மி தித்திடுஞ்
சிற்சபையி னுடல் போன்றும்,
கந்தனு மறுமுகன் வணிகன்மக னுய்வந்து
கழகத்திற் றலைய சைத்தே,
கருதருங் கவியதின் கருத்தினை யொத்திட்ட
கணக்கி லுங்கா லொன்றினை,

நந்தமா னிலமதி ஞட்டியே கரமொன்றை
நன்மணிக் குழைகளசைய,
நயநமலர் பூத்தொளிர் சிரமதை யசைத்துமே
நாடுமிவ் வுலக மகிழ,
சிந்தாம ணிச்செல்வ சிவவீர ஞானகுரு
செங்கீரை யாடி யருளே,
சிவஞரின் றேரோடுந் திருக்களர் வீதிமிசை
செங்கீரை யாடி யருளே. (1)

அளகைவளர் வீரசே கரவீச னருங்கலையி
னருஞ்செய லறிக்கை காட்டி.
அருந்தவத் தூர்வாசன் கலைசெயு மற்புதத்
தடையாள மதுவு நாட்டி,
இளமையிற் றுறவெய்து மெழிலினைச் சுற்றமு
மினிதுணரு மினிமை காட்டி,
இன்பமெய்ச் சிவபதமி டர்தருமு லகது
மென்பதன் குறியு மாட்டிக்,
களவுவெங் காமங்கள் கருத்திலு மில்லாத
கருணைநல் லருளு முள்ள,
கடைக்கணின் பொலிவதுங் கண்டாரின் கண்குளிரக்
கண்ணிமையி னழகு காட்டிச்,
செளிம்பறும் பொற்போன்ற சிவவீர ஞானகுரு
செங்கீரை யாடி யருளே,
சிவஞரின் றேரோடுந் திருக்களர் வீதிமிசை
செங்கீரை யாடி யருளே. (2)

நல்லறக் கருங்கொண்ட ஞகத்தி ழிந்தமழை
நன்கியு மன்பு நீரால்,
நாற்புறஞ் சூழ்தரப் புதுவய ஞப்பண்ணூர்
நறவுகமழ் கமல மதனில்,
புல்லிய வஞ்சமது புறப்படு மதுபொருவ
புகலுமக் கமல மீதே,

பொருந்திடுந் திருமகள் நடிக்கின்ற தொக்கவும்
புகழ்வணிகர் செல்வ மதுவும்,
அல்லியில் மேலெழு மதனையு நிகர்க்கவு
மகனிலந் தனிலி ருந்து,
அம்மகளெ ழுந்திடு மதனையுங் கடுப்பவு
மங்கைகால் விரித்து மூன்றிச்
செல்வநல் வணிககுல சிவவீர ஞானகுரு
செங்கீரை யாடி யருளே,
சிவனுரின் றேரோடுந் திருக்களர் வீதிமிசை
செங்கீரை யாடி யருளே. (3)

இத்தரையில் முத்தர்கள் பத்தர்க ளியாவரு
மிடறுற்று மூன்று மிழியும்,
இன்சுவைக் கன்னல்வில் மாரனைக் காலடியி
லிவ்வணமி தித்து வைத்தும்,
அத்தனி னருள்ஞான முத்தியை யகிலமதி
லனைத்துயிரு மடையும் வண்ணம்,
அருந்தவத் துறைதனை யகலப்ப ரப்பினாளு
மன்பரையு மாண்டு கொள்ள,
ஒத்தநற் செங்கையைச் சென்னிமிசை வைத்திடு
முத்தமக் குருவின் முறையை,
உயிர்கட்கு ணர்த்திடும் பான்மையையு ணர்த்தியே
யொப்பரு மகவ தாகிச்,
சித்தரும் போற்றிடுஞ் சிவவீர ஞானகுரு
செங்கீரை யாடி யருளே,
சிவனுரின் றேரோடுந் திருக்களர் வீதிமிசை
செங்கீரை யாடி யருளே. (4)

அண்டங்க ளத்தனையு மசைந்திடு மைம்பூத
மசைந்திடு மிரவி மதியும்,
அலகறுமு டுக்கணமு மசைந்திடு மசுரர்க
ளசைந்திடுவ ரமர ரசைவர்,

எண்டரு மும்பருல கசைந்திடும் புருகூத
    னெழிலரசு மசையு மரியின்,
இகலரும் புதமசையு மெண் கண்ணன் பதமசையு
    மென்பதையிவ் வுலகு கண்டு,
மண்டிடும் மயல்மாற்றி மதிபுனைச் சென்னியன்
    மலரடியில் மன்னி வாழ,
மலர்க்கரம சைத்துமகிழ் மத்தகம சைத்துச்செவி
    மகரகுண் டலம சைத்துச்,
செண்டுகை யினரேற்றுஞ் சிவவீர ஞானகுரு
    செங்கீரை யாடி யருளே,
சிவஞரின் றேரோடுந் திருக்களர் வீதிமிசை
    செங்கீரை யாடி யருளே. (5)

வேறு

முத்தளை யற்றவர் சென்னியில் வைத்தருள்
    முற்றப யத்தையு மொழிந்தே தான்,
முத்திய ளித்திடு பதமல ருற்றிடு
    முழுக்கிண் கிணி யாட,
நித்தமும் வந்துப ணிந்திடு மன்பர்க
    ணிதிமலி வாழ்வதின் நெறியோங்க,
நித்தனின் நீற்றை யள்ளிவ ழங்கிடு
    நிகள்கர மது மாட,
சித்தமுஞ் சென்றுதி ரும்பிடும் மறைமுடி
    செப்பிய பொரு ளோதிச்,
சீடர்கள் பந்தம றுத்திடுந் திருவாய்
    செறிந்திடு சென்னிய துமாட,
அத்தனி னருளைவ ளர்த்திடு மாதவ
    வாடுக செங் கீரை,
அணியுறு திருக்களர் மறுகிடை முநிவீர
    வாடுக செங் கீரை. (6)

பொற்கல சத்திற் பொலிந்திடு மமுதம்
பொழிந் துவழிந் தோடல்,
பொருதவு மறைமுடி யதுசொலும் பெருமொழி
புகன்றிடு மலர் வாயில்,
பற்களு முத்தெனப் பருவழி விட்டிடப்
பயனது வெனு மூறல்.
பத்திய முற்றிய சித்தர்க ளூற்றிடு
பழகிய சிவ யோக,
சிற்கக நத்தில்வ ழிந்திடும் மதுவினற்
றெரிதர வழிந் தோடச்,
சிவனரு ளுட்டங் திகழிரு கண்ணிற்
சித்தொளி யதும்வீச,
அற்புத நிகழ்வி லின்னிலை யடைந்தவ
வாடுக செங் கீரை,
அருள்வளர் திருக்களர் மறுகிடை முனிவீர
வாடுக செங் கீரை. (7)

வேறு.

வணிகர்க ளெனும்பயிர் வளர்தர மழைபெயும் வான்காரே
வறியவர் பசிகெடு மனமளித் தருடர வளர் கோவே,
பணியவர் பவமற விருளது மிரிதரு பகற் பானே,
பழமறை மொழிதரும் பரமதை யிகமதிற் பகர்தேவே,
மணியெனத் துகளற மன்னிடு பரசிவ மாதேவா.
மதியணிச் சௌிசிவன் றிருவுரு வெனவரும் மதியோனே,
அணியுறு பணிபல குயிற்றிடு குருவீர வாடுக செங் கீரை,
அன்பர்க ணிறைதருந் திருக்களர் மறுகிடை யாடுக
[செங் கீரை. (8)

இன்பருள் தாயினு மினியவை யீந்திடு மெந்தாயே
இடருறு மென்னையு மின்னெறி யேற்றிடு மிறையோனே,
துன்புறு மாயையைத் தூயமெய் யுணர்விஞற் றுடைப்
[போனே,

தொலைவறு பவக்கட ருண்டிடும் பொருளுறும் பெரு
[நாவே,
என்பது முருகிடு மிணையறு பத்திசெ யெழிஞதா
என்கடன் நின்பணி யென்னவெ னக்கரு ளிசைதீரா,
அன்பர்கள் பணிபத வருளிறை குருவீர வாடுக செங்கீரை
அணிபல நிகழ்தருந் திருக்களர் மருகிடை யாடுக செங்
[கீரை. (9)

வேறு.

பாவலர் போற்றிடும் பூமண மேறுமந் தாளா
பரவினர்க் கூறிடுஞ் செந்தே னென்றிடும் பயில்தோளா,
பூவதில் மணமெனும் பொருளே யென்றும் புகழ்வீரா
பொருவரு நற்றவர்க் கரசாய் நின்றருட் பொலிசீரா,
ஆவதி லிவர்தரு மரனுர் திருவடி யடைநீதா
அன்பே சிவமா மென்றூர் சொற்படி யதுவானேய்,
சேவகர் பரவிடு குருவீ ரப்பநின் செங்கோ செங்கீரை,
சீரார் திருக்களர் வாழ்வே யிறைவநின் செங்கோ செங்
[கீரை. (10)

2. *செங் கீரைப் பருவம் முற்றும்.*

---

3. தாலப் பருவம்.

நல்லார்க் கியற்று நன்றியது
நலிந்திங் கொழியா மனின்று,
நண்ணும் பயனை யளிக்கின்ற
நயத்தைக் காட்டி மறுகெல்லாம்,
இல்லா ரறத்தைப் போல்வளர்ந்திங்
கிளநீர் தந்து வெழுந் தெங்கு,
எண்ணூர் விண்ணின் கற்பகம்போ
லியைந்து குளிர்ந்த நிழலீயப்,

பல்லோர் பரவி மறையோதப்
பண்ணு ரிசைகள் பலவோங்கப்,
பண்பார் மறுகி லேந்தேரும்
பார்த்தன் தேர்போ லசைந்தோடும்,
நெல்லார் வயல்சூழ் திருக்களரி
நிதியே தாலே தாலேலோ.
நிகமம் போற்றுங் குருவீர
நிலயா தாலே தாலேலோ. (1)

ஆறைக் கெடுக்க வைந்தடக்கி
யகமார் நான்கை யறநிறுவி,
ஆண வத்தோ டொருமூன்றை
யடியோ டழித்திங் கிருவினையை,
பாறத் தொலைத்தோர் பரம்பொருளைப்
பாவித் தடங்கிப் பழுதற்ற,
பயனைப் புசித்துப் பரஞானம்
பழுத்த வொன்ரு முத்திதனில்,
ஏறச் சமயம் பார்க்கின்ற
வெண்ணி லடியா ரினிதிருந்து,
ஏற்றுங் குருகோட் டத்துள்வள
ரெந்தா யெல்லா வாகமுமே,
கூறற் கரிய குருவீர
கோனே தாலே தாலேலோ.
குயிலார் பொழில்சூழ் திருக்களரிக்
குன்றே தாலே தாலேலோ. (2)

பொன்னிப் புன லு மகத்திலெழும்
பொழியார் விருத்தி தனைப்போலப்,
புலமார் காலிற் பாய்ந்தங்குப்
பொலியும் பான்மை யதைப்பெற்று,
மன்னிப் பொலியுங் குளமென்னும்
வயலிற் சேல்கள் மடைதுள்ளி,

மண்ணில் விழுந்து மயங்கிமநம்
மருவு மன்பு சிறிதேனும்,
உன்னற் கற்ற வுளத்தினர்போ
லுழன் றங் குதகந் தனிற்பாய,
ஒட்டுஞ் சுற்ற மதுவென்ன
வூன் றுங் கொட்டி யாம்பல்களும்,
மின்னும் வயல்சூழ் திருக்களரி
வீரா தாலே தாலேலோ,
மிடியர்க் கருளு முனிவேந்தே
மிளிர்வே தாலே தாலேலோ. (3)

மொழியுந் தொண்ணூற் ருறதனுள்
முப்பத் தாறே முதலென் றும்,
முதலா மவற்று ளொருவயலில்
முளைத்த முதலோய் முன்னின் று,
கழியு முலகங் கனவென்றே
காட்டிக் கருணை யதுமலியக்,
கனவைக் காணுங் காட்சியது
கருது நீயென் றறிவுறுத்திப்,
பழியும் பாவ மதுநீக்கிப்
பரதா ரத்தைத் தாயாகப்,
பார்க்குங் கண்ணும் பரிந்தளித்துப்
பாலன் றனையு நனியாண்ட,
அழிவில் குருவே திருக்களரி
யண்ணல் தாலே தாலேலோ,
அறிவா யொளிரும் வீரமுநி
யப்பா தாலே தாலேலோ. (4)

ஆக்கி யளித்து மறைத்தருளி
யழிக்கு மருவா மொருமுதல்வன்,
அருளா லுயிர்க ளமைக்காக்க
வன்பு மலிந்த வடியருளந்,

தேக்கித் திகழு மருளுருவாய்ச்
செறிந்த குருவே தெள்ளமுதந்,
திளைக்கு மதுவின் தீஞ்சுவையே
தெவிட்டாப் பாகே தீயவைகள்,
போக்கிப் புரக்கும் புத்துருவே
புலவோர் போற்றும் பொற்பூவே,
புலன்மான் புகித ரகவாழ்வே
புலமுஞ் செல்லாப் பூரணமே,
பூக்கை கொண்டு பணிவாரின்
பொருளே தாலே தாலேலோ,
புலவர் புகழுந் திருக்களரின்
பொலிவே தாலே தாலேலோ. (5)

வேறு

அண்ணம்வி ரிந்துள் ளசைந்திடு நாவா ராட்டாலே
அகிலம சைந்திடு மென்பதற் கோர்சீ ரடையாளம்,
வண்ணம்ம டித்துச் சுவைத்தோர் தாலே வாயாலே.
வாய்நீர் வழியவுஞ் சுழற்றியு மோர்கால் மாலானேன்,
வெண்ணெயை யுண்டருள் தன்மையு நேரோர் விளையா
[டல்,
வியந்திடச் செய்தருள் வித்தகச் சான்றேய் வேதாந்தம்,
மண்ணிடை மலியவு மதித்தோய் தாலே தாலேலோ,
மதிமலி திருக்களர் மணியே தாலே தாலேலோ. (6)

தத்துவங் கடந்து தனிவளர் தாணே தானாகும்,
தற்பர முணர்த்துந் தண்ணருள் வாழ்வே தாடாராய்,
அத்துவி தத்தைய றிந்தவர் பேசா வாநந்தத்.
தணையறு கடலில முந்திடு வோனே யாதார,
வத்துவெ னும்பொரு ளென்றிடு வானே வானேரும்,
வந்துவ ணங்கிடு விண்ணுறை தேவே வாழ்வேறும்,
அத்தம லிந்திடு களரியி னணியே தாலே தாலேலோ,
அறிவுறு வாகிய வீரநல் லரசே தாலே தாலேலோ, (7)

அறிவுக் கறிவா யகத்துறை யுமருளே தாலே தாலேலோ,
அன்பர்க ளிக்குமா நந்தக் கனியே தாலே தாலேலோ,
செறியும் பூரணப் பொருளே சிவமே தாலே தாலேலோ,
சிந்தைக்கெட் டாத்திரு வுருவே சேணே தாலே தாலே
[லோ,
நெறியா லடையு நித்தியனே நேசா தாலே தாலேலோ,
நெஞ்சினுள் ளே நீன வாகுநிமலா தாலே தாலேலோ,
பொறிகளு டனேசெல் லாதபுநிதா தாலே தாலேலோ,
புகழுங் களரிப் புண்ணியனே போதா தாலே தாலேலோ (8

காமக் கடலைக் கடந்திட்ட கண்ணே தாலே தாலேலோ,
கருத்திற் கிசைந்த கருணைநிறை கதியே தாலே தாலேலோ,
ஏமப் புணையாய்ப் பவக்கடலி லேற்றுய் தாலே தாலேலோ,
இன்பப் பெருக்கே யெவ்வுயிர்க்கு மெந்தாய் தாலே தாலே
[லோ,
சேமச் சிறப்பே திருவாளா தேவே தாலே தாலேலோ,
செல்வம் வளர்க்குஞ் செய்தன்னின் சீரே தாலே தாலே
[லோ,
நாமப் பெருக்கார் திருக்களரி நாதா தாலே தாலேலோ,
நல்லார் தொழுமெங் குருவீர நலமே தாலே தாலேலோ. (9

புல்லர் பொருந்தாப் பொற்பாதப் பொலிவே தாலே
[தாலேலோ,
புகழு மிகழும் பொருவென்னும் புணியா தாலே தாலே
லோ,
கல்லார்க் கருளுங் கருணைவளர் கண்ணே தாலே தாலே
[லோ,
கருவைத் தொலைக்குங் கலைஞானக் கடலே தாலே தாலே
[லோ,
எல்லாப் பொருளுந் தானுக விருப்போய் தாலே தாலே
[லோ,

எள்ளத் தனையும் வேற்றுமையா யெண்ணுய் தாலே
[தாலேலோ,
வல்லார் மாட்டார்க் கருள்செய்யும் வாழ்வே தாலே
[தாலேலோ,
வளமார் களரி நெறிவீரா வளமே தாலே தாலேலோ. (10)

3. *தாலப் பருவம் முற்றும்.*

---

4. சப்பாணிப் பருவம்.

அளகையம் பதிவளர்ந் தழகுறும் வீரதரு
வடியதை வேடன் வெட்ட,
அருளுருக் கொண்டெழுந் தன்பரைக் காத்தரு
ளரன்வீர சேக ரனெனும்,
இளமதிச் சடைமுடிய் னிகலருங் கலையது
மின்பநடத் திறையி லன்பு.
மியையுறுந் துர்வாசன் கலையது மிசைந்தொரு
வின்பவடி வாயெ ழுந்து.
உளம்புகுந் தடியரி னுயிர்க்குயி ரெனமன்னி
யொளிர்தரு மறிவ தாகி,
உத்தமப் பக்குவர்க் குறுகதியை யீந்தரு
ளொருகுருவின் மேனி பெற்றுத்,
தளர்வுறு மடியர்க ளநுதிநந் தொழுஞ்சிவ
சப்பாணி கொட்டி யருளே,
தண்புனற் சாலிசூழ் திருக்களர் வீரகுரு
சப்பாணி கொட்டி யருளே. (1)

புண்ணியப் பெருக்குள பொன்வணிகர் செய்திடும்
புகழுமா லயப்ப ணிக்குப்,
பொன்னுட்டுச் சிற்பியென் றகிலமும் புகழ்ந்திடப்
பொருள்செயும் வகையு முன்னிக்,

கண்ணினிற் கண்டவக் கணங்குறிப் பெழுதிடுங்
கருணைமிக் குடைய குருவே,
கல்லால டிக்குள்வளர் சொல்லாத குருவெனக்
காட்டுசிந் முத்தி ரைக்கண்,
எண்ணியத ளித்தரு ளெந்தைநீ யிவ்வுலக
மின்பமுற் றிடுவ தற்கும்,
இன்னருட வத்தவர் என்றுமே கண்டுதான்
இன்பமுற் றிருவ தற்குத்,
தண்ணளித் தடக்கையைத் தாடலைப்பு ணர்ச்சிபோற்
சப்பாணி கொட்டி யருளே,
தரையதிற் சிறப்புறுந் திருக்களர் வீரகுரு
சப்பாணி கொட்டி யருளே. (2)

மறையொலி மகத்தொலி மன்னுபன் னிருமுறை
மருவுபண் ணிசையொ லியொடு,
மணியொலி பணியொலி மகிழும்வாத் தியவொலி
மடத்திலெழு பூசை யொலியும்,
அறைகுயில் மயிலொலி யணிகொள்குக் குடவொலி
யைந்துதே ரூரு மொலியும்,
அளவறும டியர்கள் மறைமுடிப டிப்பொலி
யரியகுரு பூசை யொலியும்,
அறைபசும டத்தொலி யடியர்கள் போற்றொலி
யகல்கடல்மு ழக்க மொக்க,
அநுதினமெ ழுகின்ற வழகுடன் புகழ்பெறு
மரியநற் றலம தென்னும்,
தரையதிற் சிறந்திடுந் திருக்களர் வீரகுரு
சப்பாணி கொட்டி யருளே,
தண்டளியி றனிவளருந் தலைவநீ தடக்கையாற்
சப்பாணி கொட்டி யருளே. (3)